Regd M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு



மலர் 28 | மன்மத மார்கழி 1955 டிசம்பர் | இதழ் 12

## திருவெம்பாவை

பத்திராசிரியர்

"திருவெம்பாவை" என்பது மாணிக்கவாசக சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய திருவாசகத்துள் மிகச் சிறந்த பகுதி. சைவ நன்மக்கள் இதை மார்கழி மாதத்தில் விடியற்காலையில் ஓதுவது வழக்கம். சிவாலயங்களில், மார்கழித் திருவாதிரையை இறுதியாகக் கொண்ட பத்து நாட்களில், இதையே எல்லாச் சந்நிதிகளிலும் எல்லாக் கால பூஜைகளிலும் பஞ்சபுராணத்திற்குப் பதிலாக ஓதுவது முறையாக உள்ளது. இதற்குப் பல காரணங்களுண்டு. ஆண்டாள் அருளிய திருப்பாவை வைணவ அன்பர்களால் மார்கழிமாதம் முழுமையும் ஓதப்பெறும். திருப்பாவை காலக்ஷேபங்கள் பல பேரறிஞர்களால் தமிழ்நாட்டின் பல பகுதிகளில் நடக்கின்றன. சில ஆண்டுகளாகத் திருவெம்பாவை திருப்பாவை மகாநாடுகள் நூற்றுக்கணக்கான இடங்களில் சிறப்பாகக் கூட்டப்பெறுகின்றன. இவைகளைக் கூட்டுவதில் காமகோடிபீடம் ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகள் அதிகமான ஊக்கம் செலுத்திவருகின்றனர். இம்மகாநாடுகளில் சைவ வைணவப் பேரறிஞர்கள் கலந்து சொற்பொழிவுகள் நிகழ்த்துகின்றனர். மார்கழிப் பனுவல்களாகிய திருவெம்பாவை திருப்பாவைகட்கு நிகழ்காலத்திலும் எதிர்காலத்திலும் அதிகமான சிறப்பு ஏற்பட்டுள்ளது என்றே சொல்லலாம். கடவுள் திருவருள் இவ்வாறு தமிழ் மக்களை நன்னெறியிற் செலுத்துகின்றது.

திருப்பாவைக்குப் பல வியாக்கியானங்கள் பூர்வா சாரியர்களால் எழுதப்பெற்றன. இவற்றுள் சிறந்தது பெரியவாச்சான் பிள்ளை அருளிய மூவாயிரப்படி. இதைத் தொடங்கும் அவதாரிகை (முன்னுரை)யில், முதலில் வக்த்ரு வைலக்ஷண்யம், ப்ரபந்த வைலக்ஷண்யம், ப்ரதிபாத்ய வைலக்ஷண்யம் எனும் மூன்றினையும் விவரிக்கின்றார். இவற்றைத் தமிழில் பாடினோர் சிறப்பு, பாட்டின் சிறப்பு, பாட்டின் பொருட்சிறப்பு என்று கூறலாம். திருவெம்பாவைக்கு இவ்வாறு பூர்வாசாரியர்கள். எவரும் உரை எழுதாமை சைவர்களுடைய தவக்குறையென்றே வருந்தற்குரியது. சமீப காலத்தில் மகாமகோபாத்தியாய பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்கள் ஒரு நல்ல உரை எழுதி வெளியிட்டார்கள். மிகச் சுருங்கியதும் விரிந்தது மல்லாத நடுத்தர அளவில் இவ்வுரை திகழ்கின்றது. திரு. ரா. சண்முக சுந்தரம் செட்டியாரவர்கள் மற்றொரு உரை எழுதி, நமது சமாஜப் பொன்விழா வெளியீடுகளுள் ஒன்றாகச் சிதம்பரத்தில் பிரசுரிக்கின்றார்கள். வைணவ முறையைப் பின்பற்றி, நாமும் திருவெம்பாவையைப் பாடினோர் சிறப்பு, பாட்டின் சிறப்பு, பாட்டின் பொருட் சிறப்பு என்கிற மூன்று பகுதிகளில் சிறிது விரிவாகக் காணலாம்.

முதலாவதாகப் பாடினோர் சிறப்பைப் பார்க்கும்போது, மாணிக்கவாசகர் சிறப்பைப்போல், வேறு எவருக்கும் சிறப்பிருந்ததாகத் தமிழ்நாட்டில் வரலாறு தெரியவில்லை. சிவபெருமான் இவருடைய பாடல்களைப் புகழ்ந்து "மாணிக்கவாசகம்" என்று கொண்டாடினான். இவருக்கு உபதேசம் செய்வதற்கென்றே திருப்பெருந்துறையில் காத்திருந்து, திருவடி தீக்ஷையும் உபதேசமும் செய்தான். திருச்சிற்றம்பலக் கோவை பாடும்படி வேண்டிக்கொண்டு, மாணிக்கவாசகர் பாடும்போது, தானே ஏடும் எழுத்தாணியும் கொண்டு எழுதிப் பிறகு, திருச்சிற்றம்பலவன் பீடத்தடியில் மறைத்துவைத்துத் தில்லை மூவாயிரவர் மூலமாக அதை வெளிப்படுத்தினான். ஆநந்த பரவச நிலையில் எற்புத் தொளைதொறும் நெக்கு நெக்குருக உள்ளம் கசிந்து

கண்ணீர் வெள்ளம் பாய இவர் பாடினர் என்பதைப் பரஞ்சோதி முனிவர் "அழுதடி அடைந்த அன்பன்" எனப் புகழும் திருவாக்காலறியலாம். திருவாசகம் படிக்கும்போது நமது கல்நெஞ்சும் உருகுவதை அனுபவிக்கலாம். "திருவாசகத்துக் குருகாதார் ஒருவாசகத்துக்கும் உருகார்" எனும் முதுமொழியும் இதை உணர்த்தும். கிறிஸ்தவப் பாதிரியாகப் பணிபுரிந்த, போப் துரைமகனார் தாம் வெளியிட்ட திருவாசக ஆங்கில மொழிபெயர்ப்பில், தாம் உருகி உருகிக் கண்ணீர் வடித்ததைத் தெரிவித்துள்ளார். திருக்கோவையின் பொருள் யாதென வினவிய தில்லைவாழந்தணர் முன் செல்லத் தாமும் தில்லைச் சிற்றம்பலவன் திருமுன் சென்று, அச்சிற்றம்பலவனே பொருள் எனச் சுட்டிக்காட்டி மாணிக்கவாசகர் தமது தூல உடலைச் சூக்குமத்திலும் அதைக் காரணத்திலும் ஒடுக்கித் தமது ஆருயிரைத் தில்லைக் கூத்தன் தூக்கிய திருவடியில் ஒடுக்கி இரண்டறக் கலந்தனர். மேலும் புத்தரை வாதில் வென்று ஊமைப் பெண்ணைப் பேச வைத்தது முதலிய பல அற்புதங்களும் இவர் சிறப்பை விளக்கும். பாட்டின் சிறப்பு. இனி திருவெம்பாவை எனும் பாட்டின் சிறப்பைச் சிறிது காணலாம். தொடக்கத்தில் கூறியபடி, மார்கழிமாதத்தில் பத்து நாட்கள் திருவெம்பாவையைத் தவிர வேறு பன்னிரு திருமுறைகளுள் எப்பகுதியையும் ஓதக்கூடாதெனும் கட்டுப்பாடு பல நூற்றுண்டுகளாக வழக்கத்திலுள்ளது. இதைத் "திருவெம்பாவைக் காப்பு" என்பர். இது அனுஷ்டிக்கப்பட்டு வந்ததைப் பற்றி ஒரு சிறு வரலாறும் உண்டு. பல மெய்யடியார்கள் நாடோறும் "திருத்தொண்டத் தொகை" எனும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருப்பதிகத்தை ஓதிவந்தனர். திருவெம்பாவைக் காப்பு நாட்களில் இப்பதிகத்தை ஓதாது விடுவதால், அறுபத்து மூன்று நாயன்மார்களின் திருப்பெயர்களைச் சொல்லி மகிழ இயலாமைக்கு மாற்று என்ன என்பதை மாதவச் சிவஞானயோகிகள் (சிவஞானமாபாடிய ஆசிரியர்) இடம் விண்ணப்பித்தனர். சிவஞானயோகிகள் "திருத்தொண்டர் திருநாமக்கோவை" எனும்

பனுவலை இயற்றி இதை ஓதுமாறு பணித்தனர் எனும் வரலாறு இப்பழைய வழக்கத்தை வலியுறுத்தும்.

இறைவனுக்குத் திருவெம்பாவையிலுள்ள ஈடுபாடு வேறு திருவாசகப்பகுதி எதிலும் கிடையாது. திருக்கோவை பாடும்படி ஏடும் எழுத்தாணியும் கொண்டு மாணிக்க வாசகரை வேண்டிக் கொண்டபோது "பாவை பாடிய வாயால் கோவை பாடு" என்றுனே தவிர, சிவபுராணம் பாடிய வாயால், திருச்சதகம் பாடிய வாயால், நீத்தல் விண்ணப்பம் பாடிய வாயால் என்றெல்லாம் வேறு எப்பகுதியையும் குறித்திலன்.

திருவெம்பாவை தமிழ் மன்னர் மூவர் முடிசூட்டு விழாவில் ஓதப்பெற்ற செய்தியை ஊகிக்கலாம். இப்போது Thailand என வழங்கும் சீயம் (Siam) தேசத்தில் நடைபெறும் "மன்னர் அரசியல் சடங்குகள்" (Siamese State Ceremonies) எனும் நூல் ஒன்றை, Quaritch Wales எனும் ஆசிரியர் இயற்றியுள்ளார். அதில் முடிசூட்டு விழா முதலிய சில முக்கியமான சடங்குகளில் திருவெம்பாவை ஓதப்படுவதைக் குறித்துள்ளார். தமிழர் நாகரிகம் சில சோழ மன்னர்கள் ஆட்சியில் சீயம், கம்போடியா, சுமத்திரா, ஜாவா முதலிய நாடுகளில் பரவிய செய்தியைப் பல சான்றுகளால் அறியலாம். இதைப் பற்றிய விரிவான ஆராய்ச்சி நூல்களை, திரு. நீலகண்ட சாஸ்திரியார் முதலிய பல பேரறிஞர்கள் இயற்றியிருக்கின்றனர். தமிழ் மன்னர்கள் முடிசூட்டு விழாவில் ஏற்பட்ட சடங்குகளையே, சீயம் முதலிய நாடுகளிலும் கைக்கொண்டிருக்க வேண்டும். எனவே பழைய காலத்தில் திருவெம்பாவை இவ்வாறு பயன்பட்ட தென்பதை நன்றாக முடிவுகட்டலாம்.

பாட்டின் பொருட்சிறப்பு :— இனி, திருவெம்பாவை இருபது பாசுரங்களிலுள்ள பொருட் செறிவையும் நுட்பத்தையும் பார்க்கலாம். ஒவ்வொரு பாசுரத்திற்கும் இரண்டு மணி நேரத்திற்குக் குறையாமல் விளக்க விரிவுரை நிகழ்த்தலாம் எனின், ஒரு சிறு கட்டுரையில் இதைக் கூறிமுடிப்பது இயலாது. பொதுவாகச் சைவ சித்தாந்தம் கூறும் சாத்திர

நுட்பங்களனைத்தையும் இப்பனுவலில் காணலாம் எனல் மிகையாகாது. முப்பொருளுண்மை, கடவுளைப் பற்றிய கருத்துக்கள், அவர் ஐந்தொழில் விவரங்கள், அவருக்கும் உயிர்கட்கும் உலகத்துக்கும் உள்ள தொடர்பு, உயிர்களைப் பற்றிய விவரங்கள், மும்மலங்களின் இலக்கணம் வகை தொகை, மும்மலங்களை ஒழிக்கும் உபாயங்கள், சரியை முதலிய நான்கு வழிகளின் நுட்பம், பாசநீக்கம், சிவப்பேறு, இரண்டறக்கலத்தல் முதலிய நூற்றுக்கணக்கான செம்பொருள்கள் திருவெம்பாவையிலுண்டு.

முதற் பாசுரத்தின் முதலடி "ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதியை" என்பது. நாம் ஊனக் கண்கொண்டு பார்க்கும் சோதிகளெல்லாம் ஆதியும் அந்தமும் உடையன, எளிய சிறிய நிலையிலிருப்பன. திருவெம்பாவை கூறும் சோதி இதற்கு முற்றிலும் மாறுபட்டது. இதை ஞானக் கண்கொண்டு பார்த்து அனுபவத்திலறிய வேண்டும். உண்மையான பல பொருள்கள், நமது ஊனக் கண்ணிற்குப் புலப்படாத நிலையிலும் உள்ளன என்பதை William James என்ற ஆசிரியர் இயற்றிய (The Varieties of Religious Experience) நூலின் (The Reality of the Unseen எனும்) மூன்றும் அதிகாரத்திற் காணலாம் சமய குரவர் நால்வர், அருணகிரிநாதர், தாயுமானவர் முதலிய சைவப் பெரியார்கட்கு இவ்வனுபவம் இருந்ததை அவர்கள் திருவாக்கு நன்கு விளக்கும். Saints Peter, Paul முதலிய கிறிஸ்தவப் பெரியார்கட்கு இவ்வனுபவம் இருந்ததை William James தமது நூலில் Photism எனும் தலைப்பில் விளக்குகிறார்.

இனி இரண்டாம் அடியில் "யாம் பாடக் கேட்டேயும் வாள்தடங்கண்மாதே வளருதியோ, வன்செவியோ நின் செவிதான்" எனும் குறிப்புள்ளது. ஒளியனுபவம் உடைய பெண்கள் தம் பெருமை தோன்ற "யாம்" என்கின்றனர். ஒளி பொருந்திய அகன்ற கண்களோடு விழித்துக் கொண்டே, சமயானுபவத்தில் அழுந்திக் கிடந்து பேசாதிருக்கும் நிலையில் ஒரு பெண் இருப்பதையே "வாள்தடங்

கண்மாதே வளருதியோ " என்ற தொடர் குறிக்கின்றது. ஏனைய சொற்றொடர்கட்கும் இம்முறையில் பொருள் விரிவு செய்யலாம்.

முதல் எட்டுப் பாசுரங்களில் தூங்குபவரை எழுப்பும் குறிப்பும் கதவைத் திறக்குமாறு வேண்டும் குறிப்பும் இருத்தலால் மொத்தம் ஒன்பது பெண்கள் திருவெம்பாவை யிற் கலந்து கொள்வதாக எண்ணி, நவசக்திகள் பிரபஞ்ச காரியத்தின் பொருட்டுத் தொழிற்படுதற்கு ஒருவரை ஒருவர் பிரேரித்தனர் எனும் தத்துவ நுட்பம் திருவெம்பாவைக்குக் கூறப்படுவதுண்டு. இதற்கியைய வேறு பல பொருத்தங் கள் அமைக்கப் பெறுவதுமுண்டு.

இனி ஒன்பதாம் பாசுரத்தில் " முன்னைப்பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளே, பின்னைப் புதுமைக் கும் பேர்த்தும் அப்பெற்றியனே " எனும் தொடர்மொழி, சிவபெருமானுடைய தொன்மைநிலை, புத்துணர்விற் கெளி வருநிலை, சொரூபலக்கணம், தடத்தலக்கணம் முதலிய பல நுட்பங்களைக் குறிக்கும். பெண்கள் விண்ணப்பிக்கும் பேறுகள் மிக மிக வியக்கத்தக்கன. சிவபெருமானைத் தலைவனாகப்பெறுதல், அவனுக்கு அடிமையாதல், அவனடி யார்கட்கு அடிமை செய்தல், அவர்களையே வாழ்க்கைத் துணைவராகப் பெறுதல் முதலியன காண்க. இப்பேறுகள் கைவரப்பெற்றால் " என்ன குறையுமிலோம் " எனும் பெருமை இயற்கையாக வரும்.

இனி மேலுள்ள ஒவ்வொரு பாசுரத்திலும் பற்பல நுட் பங்கள் உள்ளன. பதின்மூன்றும் பாசுரத்தில் நீராடும் மடு, சிவபெருமானுக்கும் உமையம்மைக்கும் ஒப்பிடப்பெற்றுத் திருநோக்கால் பரிசத்தால் திகழும் வாக்கால் செய்யப் பெறும் தீக்கை முறைகளும் குறிக்கப்படுகின்றன. பதினைந் தாம் பாசுரத்தில் மெய்யடியார் உணர்ச்சிக்குறிகள், சேக்கிழார் பத்தராய்ப்பணிவார் புராணத்துட் கூறும மெய்ப பாடுகள் முதலியவற்றைக் காணலாம். பதினாறும் பாசுரத் தில் உமையம்மையின் பாதாதிகேச வர்ணனையுள், மழை பெய்கிற விவரங்கள் மிக அழகாக உவமிக்கப்பெறு

கின்றன. அடுத்த பாசுரத்தில், சிவபெருமான் குருவாகவும் ஜங்கமரூபத்திலும் அடியவர் இல்லங்கட்கு எழுந்தருளி வந்து அருள் வழங்கும் சேவகப் பெருமை புகழப்படு கின்றது. அடுத்த பாசுரத்தில் அண்ணுமலையான் ஆண் ஆகிப் பெண்ணுகி வேருகி உடனுகி உயிர்கட்கு அருள் வழங்கும் நுட்பம் குறிக்கப்படுகின்றது. அடுத்த பாசுரத்தில் எத்தகுதியினரைத் தாம் விரும்பவில்லை யென்பது (ஒன்பதாம் பாசுரம் கூறும் தகுதிகள் சிறிதுமில்லாதவரென்பது) கூறப் படுகின்றது.

இறுதிப் பாசுரத்தில், ஆதியும் அந்தமும் தோற்றம் நிலை இறுதி மறைப்பு அருள் ஆகிய ஐந்தும தில்லைக்கூத்தன் திருவடியாகிய திருவருட் செயலே என்பது வற்புறுத்தப் பெற்று, மார்கழி நீராட்டு புகழப்பெற்று, மார்கழிப் பனுவ லாகிய திருவெம்பாவை வாழ்த்துக் கூறுகின்றது.

நாமும் திருவெம்பாவையைப் பொருளுணர்ச்சி ததும்ப ஓதி நற்பயன் பெறுதற்குச் சிவபெருமான் அருள்புரிவாராக.

---

# தொல்காப்பியச் சிறப்பு

**உதவிப்பத்திராசிரியர்**

தோல்காப் பியம்என்னும் தொன்மைப் பெருநூலின்
ஒல்காப் பெருஞ்சிறப்பை உய்த்துணரின் - அல்கா
தறிதோ றறியாமை ஆழ்ந்தகன் றோங்கித்
தொடுவானம் போற்செல் லும் சூழ்ந்து. (1)

பழமை பெருமைநூற் பண்பனைத்தும் வாய்ந்து
விழுமியர்கள் எல்லாம் வியப்ப - முழுமணியாய்ச்
செந்தமிழ்க்கே ஓர்சிறந்த தெய்விகநூ லாய்விளங்கும்
நந்தமருந் தோல்காப் பியம். (2)

மொழிகள் பலப்பலதாம் மூதுலகில் உண்டு
ஒழிவில் இலக்கணமும் உண்டு - வழிமுறையே
என்றாலும், தோல்காப் பியம்போல் இலக்கணநூல்
ஒன்றேனும் இவ்வுலகத் தில். (3)

வழுத்துபெரு மாண்புடைய மற்றை மொழிகள்
எழுத்தொடு சொல்லின் இலக்கணமே - முழுத்தும்
எடுத்துரைக்க மாட்டா திளைப்பப், பொருளும்
தொடுத்துரைக்கும் தோல்கப் பியம். (4)

எழுத்தொடுநற் சோல்லியல் பெல்லாம் இனிதே
முழுத்தும் விளக்கி மொழிந்து - விழுப்பமிகத்
'தள்ளாப் போருளியல்பும்' சாற்றியதோல் காப்பியம்போல்
எள்ளச்சீர் நூல்,யாண்டும் இல்! (5)

உயர்திணை அஃறிணை என்றிவ் வுலகை
மயர்வில் அறிவின் வளத்தால் - செயிரற
நன்று பிரித்ததொடு நல்லஅகம், புறம்
என்றுமிரு கூறுகண்டார் யார்? (6)

களவுநெறி கற்புநெறி கட்டுரைத்துள் ளத்தே
உளவாம்மெய்ப் பாடுவமை ஓர்வித் - தளவையிலாச்
செய்யுளியல் நன்மரபும தேற்றினர்தோல் காப்பியனர்
வையமெங்கும் இல்லா வகை. (7)

முதலும் கருவும் உரியுமென மூன்று
வகையால் உலகை வகுத்துத் - தகைமைமிகத்
தெய்வமுண மாமரம் புள்பறையாழ் செய்திமக்கள்
மெய்யியல்பும் தேற்றினர்யார் வேறு? (8)

புலநெறி நல்வழக்காற் காதல் பொருந்தும்
தலைமக்கள் வாழுநெறி சாற்றி - உலகியலில்
' இன்பம் போருள்அறன்கள் ' என்பவெலாம் எய்துமுறை
மன்பதைக்குச் சொல்லினர்யார் மற்று? (9)

இறைஉயிரே அன்றி,உல கின்னியலும், நல்ல
துறவியலும் மற்றுமெலாம் சொல்லும் - முறையால்
இலக்கணநூல் நுட்பம் இறைநூற்கோள் வாய்ப்பக்
கலக்கமறச் சொற்றார்யார்? காண்! (10)

' நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டிவிடும் ' என்னும் - குறள்மொழியால்

வள்ளுவரும் தொல்காப் பியம்போற்றும் வாய்மையினைத்
தெள்ளிதிற் காணலாம் தேர்ந்து. (11)

“ உயிரிற் சிறந்தன்று நாணே, அந் நாணிற்
செயிர்தீர்காட் சிக்கற்புச் சீர்த்தென் ” - மயல்தீரும்
தொல்காப் பியநூற்பாச் சூழ்ந்து, மணிமொழியார்
நல்காத லிற்போற்றி னர் ! (12)

“ வாழ்கநல் அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்கபுனல் வேந்தனும்மிக் கோங்குகெனும் ” - ஆழ்பொ
ஞானசம்பந்தருமே நன்றுதொல் காப்பியநூல் [ருட்பா
ஊனமின்றிப் போற்றலுணர்த் தும். (13)

தேக்கு பெரும்புலமைச் செம்மலாம் நம்மருமைச்
சேக்கிழார் பெம்மான், தம் தெய்வ அருள் - வாக்கினல்
நன்றே “ அருந்தமிழ் ” நூல் என்று, நனிபுகழ்ந்த
தொன்றே இதன்திறம்சாற் றும். (14)

ஐந்தெனும்பல் லாயிரமாம் ஆண்டுகட்கு முன்பேயே
செந்தமிழில் அன்றிச் சிறந்துமிகும் - இந்தவகை
நாகரிகத தெய்வநல நல்லறிவு நூல்களொன்றுண்
டாக, நினைப்பவும்யார்க் காம் ? (15)

---

# குமரகுருபர சுவாமிகளின் அற்புதங்கள்

சு. கணபதிப்பிள்ளை

தென் பாண்டி நாட்டில் பொருநை ஆற்றங்கரையில் ஒன்பது கைலாசங்களிலும் ஒன்பது திருப்பதிகளிலும் ஒன்ருகிய ஸ்ரீவைகுண்டத்தில் இற்றைக்கு 339 ஆண்டுகட்கு முன் அவதரித்த குமரகுருபரர் ஐந்து ஆண்டளவும் ஊமையாக இருந்து செந்தில் ஆண்டவன் திருவருளால் வாக்குப் பெற்று, உலக மக்கள் உய்ய கந்தர் கலிவெண்பா பாடிய அற்புதத்தையும், மதுரை மாநகர் போந்து, மீனட்சியம்மைப் பிள்ளைத்தமிழ் பாடி, அப்பாட்டை தேவியின் முன் அரங்கேற்றம் செய்கையில் தேவியார் அர்ச்சகரின் மகளை போன்று மதுரை மன்னன் திருமலைநாயக்கன் மடியில் திரு

வுருவம் கொண்டருளி "தொடுக்குங் கடவுள் பழம்பாடல்" என்னும் செய்யுளை "இன்னும் ஒருமுறை கூறுவாய்" என்று திருவாய் மலர்ந்தருளி யாவரும் மகிழவும், முத்தப் பருவத்தில், "காலத்தொடு கற்பனை கடந்த" என்னும் பாட்டிற்குப் பொருள் உரைக்குங்கால் மீனாட்சியம்மையார் ஒரு முத்து வடத்தைச் சுவாமிகள் கழுத்தில் அணிந்து மறைந்தருளிய அற்புதத்தையும் பின்னால் மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை, மதுரைக் கலம்பகம், நீதிநெறி விளக்கம் முதலிய நூல்களை அருளிச்செய்து அரச விருது கள், சன்மானங்களுடன் தருமபுரம் உயர்திரு மாசிலாமணி தேசிகரை அடைந்து அவரையே ஞானாசிரியராகப் பணிந்து எற்றித் தொழுது அன்னாரின் ஆணையின் பேரில் சிதம்பரம் போகும் வழியில் திருப்புள்ளிருக்கு வேளூரை அடைந்த போது, முத்துக்குமாரக்கடவுள், சுவாமிகளிடத்து அர்ச்சக வடிவாய் வந்திருந்து தம்மைக் குறித்து ஒரு பிள்ளைத்தமிழ் பாடும்படிக் கட்டளையிட அதன்படியே குமரகுருபர அடி களும் முத்துக்குமார சுவாமிகள் பிள்ளைத்தமிழ் பாடி அரங் கேற்றிப், பின் சிதம்பரம் சென்று நடராசப் பெருமானை வணங்கி 41 நாள் அங்கிருந்து சிதம்பர மும்மணிக்கோவை, சிதம்பரம் செய்யுட்கோவை, சிவகாமியம்மை இரட்டை மணி மாலை முதலிய பிரபந்தங்களை இயற்றிய பின் தருமபுரம் சென்று, துறவறம்பூண்டு, பக்திரசம் பொங்குமாறு பண்டார மும்மணிக்கோவை என்னும் நூலை இயற்றிப் பின், காசியம்பதி சென்று தன் தவத்தின் வலிமையாலும், கலைமகள் அருளா லும் "சகலகலாவல்லி மாலை" யென்னும் ஒருபிரபந்தத்தைப் பாட, கலைமகள் திருவருளால் சுவாமிகள் விரும்பியபடி இந்துஸ்தானி மொழியைத் தெரிந்து, காளியின் அருளால் ஓர் உயிருள்ள சிங்கத்தின்மீது ஏறி காசியை ஆண்டுவந்த பாட்சாவின் அரச மன்றத்தை அடைந்தபோது, அஞ்சுப் அரசனை நோக்கி அவன் கண்ணுக்கு மாத்திரம் சிங்கம் பசுவாகத் தோற்றுவித்த விந்தையையும் விளக்கி, அம் மன்னனிடம் நட்புரிமை கொண்டு அநேக சொற்பொழிவு கள் ஆற்றிவரும் காலத்தில், காமானுபவமில்லாத அடிக்ள்

சிற்றின்பத்தைக் குறித்துப் பேசுதல் முடியாதகாரியம் என சந்தேகித்த மகமதியர்கட்கு சுவாமிகள் ஒரு செப்புப் பாத்திரத்தை இரசவாதமில்லாமல் பொற்குடமாக்கியதை யும், மேலும் சைவசமயமே மெய்ச் சமயம் என்பதை நிரூபிக்க சிவக்கக் காய்ச்சிய இரும்பைத் தமது திருக்கரத் தில் ஏந்தியதை யாவரும் அதி அற்புதம் என்று போற்றிச் சிவபெருமானே பரம்பொருள் என்ற உண்மையைத் தெரிந்து அடிகளைப் போற்றிய வரலாறும் பாதுசாவின் அழைப்பிற் கிணங்கித் தனக்கு அளித்த புலால் உணவை உற்று நோக்க அவைகள் காய் கனி முதலிய உணவுப் பொருள்களாக மாறின அற்புதத்தையும் விளக்கிச் சொன்னார்கள். பாதுசா அடிகளுக்கு நிலமும் கொடுத்து அதில் ஒரு பெரிய திரு மடமும் கட்டி அதிலே தனது முத்திரையும் வைத்துத் தத்த மும் செய்து அவருக்கு வேண்டிய சிறப்புகளையும் செய்த வரலாறுகளையும், மறைந்து கிடந்த கேதார நாதர் ஆலயத் தைப் புதுப்பித்து, தமிழ் முறையிலேயே இன்றளவும் பூசை முதலியன நடக்க ஏற்பாடு செய்ததையும், துளசிதாசருக்குக் கம்பராமாயண நுட்பங்களையும், சைவ சித்தாந்த தத்துவங் களையும் போதித்த வரலாறும் சொல்லப்பட்டது. பின்னல் தமது ஞானசிரியரைத் தருமபுரத்தில் தரிசித்து உடன் வசித்துக் காசிக்குத் திரும்பினார். இங்ஙனம் மூன்று முறை வந்து தரிசித்துப் பின்னர் சில ஆண்டுகள் காசியிலே சிவான்று பூசைச் செல்வராய் வீற்றிருந்து ஒரு வைகாசித் திங்கள், தேய்வுபிறை மூன்றும்நாள் சிவபெருமான் திருவடி நீழலில் கலந்தருளினர்.

——

## வாகன கவி

### அம்பை—சங்கரனார்

ஒவ்வொரு சமயத்தைப்பற்றியும் தந் தம் தகுதிகளுக் கேற்ப விளக்கிச் சொல்லும் நூல்களுக்குச் சாத்திரங்கள் என்றும், அவ்வச் சமயச் சாத்திரக் கருத்துக்களைத் தன்னுட் கொண்டு அவ்வச் சமயச் சார்பான கடவுளரைப் போற் றும் பகுதிகளுள்ள நூல்களுக்குத் தோத்திரங்கள் என்றும்

ஆன்றோர் கூறுப. எல்லாச் சமயங்களிலும் சாத்திரம் தோத்திரம் என்ற இரு பிரிவுகளும் உள. சாத்திரம் சமய அறிவு வேண்டுமென்று விரும்புவோர் பயில்வது. ஆனால் தோத்திரமோ சமய அறிவு அற்றவரும் விரும்பிப் பயிலத் தக்கது. அவரவர் சமய அறிவு நிலைக்கேற்ப தோத்திரங் களின் பொருட் செறிவு நன்கு புலனாகும். அதனால் பாமர மக்களும் விரும்பி மேற்கொள்ளத்தக்கது தோத்திரமே யாகும். சாத்திர அறிவு மேலோங்கியிருந்தும் தோத்திரப் பகுதியில் நுழையாரேல் அவர் சிறந்தவராகார். அவரைத் தான் "சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்!...பாத்திரம் சிவ மென்று பணிதிர்" என்று அப்பர் பெருமானார் இடித் துரைத்தார். சாத்திர அறிவு இல்லாமலே தோத்திரத்தை மேற்கொள்ளலாம். அதனால் சாத்திரம் பயிலவேண்டா மெனல் கருத்தன்று. ஆனால் மிகவும் இறையருளைப் பெற வல்லதாக்குவது தோத்திரப் பகுதியேயாம்.

இக்கருத்தைக் கொண்டுதான் நம் சைவ ஆன்றோர்கள் பலரும் சைவத் திருமுறைகளையே யருளிச் செய்தனர். இல்லையேல் அவைகள் கிடைக்கும் பேற்றினை நாம் பெற் றிருக்க மாட்டோம். மேலும் நம் தமிழகத்தில் ஆங்காங் குள்ள பெரியோர்கள் தங்கள் வழிபடு தலங்களில் உள்ள பெருமான், அம்மையைப் பற்றியும தோத்திர நூல்கள் பல இயற்றிப் போந்தனர். நம் சைவத்திருமுறைகள் பொதுத் தோத்திர நூல்களின்பாற்பட்டவை. ஆங்காங்குள்ள தல நூல்கள் சிறப்புத் தோத்திர நூல்களாகும். அந்தாதிகள், உலாக்கள், தூதுகள், பிள்ளைத்தமிழ்கள், சிலேடை வெண் பாக்கள் முதலிய பல நூல்களும் அவ்வத்தலத்திற்குரிய சிறப்புத் தோத்திர நூல்களே. இவை போன்ற தோத்திர நூல்களும் நம தமிழ் மொழியில் சைவசமயத்திற்குரியவை யாய்ப் பலவுள்ளன.

இவைகளுடனமையாமல் நம் பெரியோர்கள் அவரவர் கள் வழிபடு தலங்களுக்குச் செல்லுங்காலத்து அப்பெரு மான்மேல் அவனருளாலேயே சில பாக்களைச் சொந்தமாக அவ்விடத்திலேயே இயற்றிப் பாடுதலுமுண்டு. அவ்வாறு

சாதாரண நாட்களில் பாடாவிடினும் விழாக்காலங்களில் ஒவ்வொரு வாகனத்திலும் பெருமான் எழுந்தருளும்போது அப்பெருமானையும் அவ்வாகனச் சிறப்பையும் அவ்வழி பாட்டினால் அடையும் பேற்றினையும் பற்றிப் பாடுவது வழக்கம். இவ்வாறு பாடும் கவிகளுக்கு வாகன கவிகள் என்று பெயர். இவ்வாகன கவிகள் சில சிறந்த தலங்களுக்கு உண்டு. நம்முன்னோர்கள் பாடிவைத்த அவ்வாகன கவிகளைப் பொன்னேபோற் போற்றிக்கொண்டு சில கோயில்களில் அவ்வவ் விழாக்காலங்களில் கோயிலோதுவார்களைக் கொண்டு அதிகாரிகள் பாடச்செய்து வருகின்றனர். சில கோயில்கள் அவ்வழக்கத்தைக் கைநழுவவிட்டன. அதனால் அக்கோயில்களுக்குரிய வாகன கவிகள் மறைந்தொழிதற்குரிய நிலையை அடைந்தன.

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள பாவநாசத் திருத் திருத்தலம் சந்தனப் பொதியத்தடவரையினடிவாரம் ஆகும். அங்கேயே நம் சிவஞான முனிவர் தோன்றினர். அவர் முன்னோர்களுக்குப் பாவநாசத் திருத்தலத்திலுள்ள பெருமானே வழிபடு கடவுளாவர். அதனால் அவர்கள் அப் பாவநாசப்பெருமான், அம்மையைப் பற்றிப் பல நூல்கள் இயற்றியுள்ளனர். அவை "சிங்கைப் பிரபந்தத் திரட்டு" என்ற பெயரில் வெளிவந்துள்ளன. மேலும் மேற்குறிப்பிட்டவாறு அப்பெரியோர்கள் பாவநாசத்திலுள்ள பெருமானைப்பற்றிப் பல வாகன கவிகளையும் இயற்றியுள்ளனர். சிவஞான முனிவர் கால்வழியினருள் தலைசிறந்தோராய உயர்திரு V.S. ஆறுமுகம் பிள்ளை (அம்பாசமுத்திரம்) அவர்கள் வீட்டில் ஒருசமயம் பலபழைய ஏட்டுச் சுவடிகளை யான் பார்க்கநேர்ந்தது. அப்போது இவ்வாகனகவிகளும்கிடைக்கப் பெற்றன. அவைகளுள் சிலவற்றைஈண்டுத் தருகின்றேன்.

**நாலாந்திருவிழாவுக்குரிய வாகனகவி**
**வாகனம்—விடை**

பூங்கமலத் தயனுமலர்ப் புண்டரிகக்
கண்ணனும் போபற்றி வைசபத்
தேங்கமழும் பொழிற்சிங்கைச் செல்வியுல
கன்னையொடும் திருநாள் நான்கில்

வேங்கையின்றோ லரைக்கலசத்த விமலக்கவி
யாணலிங்கர் விடைமேற் கொண்டு
பாங்கியொடு பவனிவந்தார் பழவடியா
ருடன்றொழுது பலன்பெற் றோமே.

எட்டாந் திருவிழாவுக்குரிய வாகனகவி
வாகனம்—வெட்டுங்குதிரை

மட்டுவார் குழலியுல கம்மையொடு
மாண்புறவீற் றிருக்கு நம்பர்
பெட்டுறவே முக்களவி லுறையுநல
பெருமனருள் புரிய வேண்டி
எட்டுஎனப பகருவிழ வதிலடிய
ரின்புறநல் லேற்ற மிக்க
வெட்டும்நற் பரியதனில கிட்டியநல்
மணியதனை விழைந்துய் வோமே.

ஒன்பதாந் திருவிழாவுக்குரிய வாகனகவி
வாகனம்—தேர்

வாதஞ்செய் மூலமடவார் நடன மாடும்
வளர்சிங்கைத் தலத்தின்ஒன்பான் மகிழ்விழாவில்.
பாரதனை யீன்றபசுங் கிள்ளை யான
பைங்கொடிமா தலதமையாள் பாகமாகப்
பாரதங்கோட் டாலெழுதும் பகவன் றன்னைப்
பயந்தென்றும் பவந்தீர்க்கும பாவ நாசர்
பூரதமே லேறியருள் புரியவேநாம்
புகழான செல்வமெலாம் பொருந்தி னோமே.

மேலும் ஊஞ்சல் திருவிழா முதலிய விழாக் காலங்களி லும் ஊசற்பாட்டு முதலியவைகளைப் பாடுவது மரபாயிருந் துள்ளது. அவற்றில் சிலவருமாறு:—

(1) சந்தமிகுந் தெறிதிரைசூழ் பொருனை யோர்பாற்
சன்மார்க்க நெறியருள்முக் களவில் வாழு
மங்களநல் யாணலிங்கர் மகிழ்ந்து வேட்ட
மாதுலக நாயகிமே லூஞ்சல் பாட

வங்கமலி திரையருந்து முனிவர் வாழ்த்த
வரமருளும் வடிவேலர் முன்னை யாய
துங்கமிகு கருணைமதம் பொழிந்து காக்கும்
தும்பிமுகத் தெந்தைபதம் துணைய தாமே.

(2) அந்தரதுந் துபிமுழங்க மறைக ளார்ப்ப
ஆரணனே முதற்றேவர் சடங்கு செய்ய
சந்தமலி தளபமணி மாலை வேய்ந்த
கண்ணனுந்தன் கரகநீர் தாரை வார்ப்பச்
சந்தவரை முனிமுதலோர் ஆசி கூறத்
தவம்புரியுந் தொண்டர்குழாந் தொழுது போற்ற
அந்திமதி யணிபாவ நாசர் வேட்ட
அம்மையுல கன்னையிருந் தாடி ரூசல்.

நம் முன்னோர்கள் திருமுறைகளோதுதலில் வல்லராய்ப் பெருமானைப் பாடிப் பரவுதலோடமையாது தாங்களே சொந்தமாய் நூல்களையும், வாகனகவி, ஊசற்பா முதலியவைகளையும் இயற்றித் துதித்தனர். நாமோ செய்யுளியற்றும் ஆற்றலை யிழந்து நிற்கின்றோம். சிலர் பாட முனையினும் பாடத்தக்க நல்லூழற்றவர்களாய்ப் பிழைகள் மலிந்து காணப் பெற்றிடர்ப்படுவர். ஆகவே, நாமாகப் பாடாவிடினும் முன்னோர் நமக்காகப் பாடிவைத்த தோத்திர நூல்களை யாவது போற்றிப் படிக்கவேண்டாவா? மனமுருகிக் கரையவேண்டாவா? அந்நாள் எந்நாளோ?

தொழுது தூமலர் தூவித் துதித்துநின்று
அழுது காமுற்று அரற்றுகின் றாரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதும் கீழ்க்கணக்கு இன்னம்ப ரீசனே. —அப்பர்

---

## உறையூர்

சு. சுவாமிநாத தேசிகர், சுந்தரப்பெருமாள்கோயில்

பொன்னிமாநதிப் புனல்மல்கி வளம் கொழிக்கும் புண்ணியம் பெற்றது சோழ நாடு. அந்நாட்டில் பாடல் பெற்ற சிவத்தலங்கள் பலவுள்ளன. அவைகளுள் சிறந்த தொன்று திருமூக்கீச்சுரம் என்னும் உறையூரே யாகும்.

1. இருப்பிடம்: இவ்வரும்பதி தென்னிந்திய இருப்புப்பாதையில் திருச்சி (திருச்சிராப்பள்ளி) கோட்டை புகை வண்டி நிலையத்திலிருந்து மேற்கே ஒன்றேகால் மைல் தூரத்தில் உள்ளது.

2. தலப்பெயர்கள்: இவ்வரும்பதியைத் தேவாரத்தில் திருமூக்கிச்சுரம் என்றே அழைக்கப்படுகிறது. நடைமுறையில் உறையூர் என வழங்கிவருகிறது. வீரவாதித்த சோழன் பவனி வரும்போது கோழியொன்றினால் அவனைத் தோல்வியடைவித்துத் தம்மை இறைவன் வெளிப்படுத்திய காரணத்தால் இது கோழியூர் என்றும் சொல்லப்பெறும். மேலும் இவ்வூர் முற்காலத்தில் பேரூராயிருந்து சிற்றூர் ஆயிற்று. தற்காலத்தில் இவ்வூர் சிறிய ஊராய் இருந்து பெரிய ஊராகி ஒரு மாவட்டத்தின் தலைமைப் பதியாக இன்று திகழ்கிறது. முன்னாளில் காவிரியாற்றின் கரையிலே பெரிய ஊர்கள் பல இருந்தன. அவற்றுள்ளே தலைமையாக சிறப்புற்று விளங்குவது உறையூர் என்னும் திருநகரம். அதுவே சோழநாட்டின் பழைய தலைநகரம். "ஊர் எனப்படுவது உறையூர்" என்று அதன் பெருமையைப் பாராட்டினார்கள் செந்தமிழ்ப் புலவர்கள். வடமலை என்னும் பெருமலையில் வேங்கைக் கொடியை நாட்டிய திருமாவளவன் மரபினராய சோழமன்னர்கள் உறையூரில் அரசு வீற்றிருந்தனர். "குலகிரியின் கொடுமுடிமேல் கொடிவேங்கைக் குறியெழுதி, நிலவுதரும் மதிக் குடைக்கீழ் நெடுநிலங் காத்து இனிதளிக்கும், மலர் புகழ்வண் தமிழ்ச்சோழர் வளநாட்டு மாமூதூர், உலகில்வளர் அணிக்கெல்லாம் உள்ளுறையூ ராம்உறையூர்." (குலகிரி - இமயமலை, கொடுமுடி - சிகரம) என்று சேக்கிழார் பெருமான் பாடிய திருத்தொண்டர் புராணம் அதன் பெருமையை எடுத்துக் கூறுவதால் நன்கு அறிவாம்.

தமிழ்ச் சோழர் வாழ்ந்த அத் தலைநகரில் கலைமகளும் திருமகளும் களிநடம் புரிவாராயினர். "கார் ஏறும் கோபுரமும், கதிர் ஏறும் சோலைகளும், தேர் ஏறும் வீதிகளும" அத்திருநகரின் கண்கொள்ளாக் காட்சிகள் என்று பொய்யறியாப் புலவர் பாடினர். செழுமை வாய்ந்த உறை

யூரிலே பிறந்த கோழிகளும் சிறந்த வீரம் வாய்ந்து விளங்கின. அக்கோழிகள் பாய்ந்தும் பறந்தும் படித்தும் அடித்தும் நெடும்போர் புரிவதைக் கண்டு மகிழ்ந்தனர் பண்டைய அரசர்கள். பகைவர்மீது படையெடுத்துச் செல்லாத காலங்களில் அன்னார் கோழிப்போர் கண்டு மகிழ்ந்தனர். "வருசெரு ஒன்று இன்மையினால்மற் போரும் சொற்புலவர் வாதப் போரும், இருசிறைவா ரணப்போரும் இகல் மதவா ரணப் போரும் இணைய கண்டே." (செரு - போர், சிறை வாரணம் - கோழி, மதவாரணம் - யானை) சோழ மன்னன் ஒருவன் இன்புற்றான் என்று கலிங்கத்துப் பரணி கூறுகின்றது. போர் நிகழாத காலங்களில் சோழமன்னன் தலைநகரில் மல்லர்கள் மற்போர் புரிவர்; புலவர்கள் சொற்போர் புரிவர்; கோழியும் கோழியும் கொடும் போர் புரியும்; வேழமும் வேழமும் வெம்போர் புரியும்.

இதுபோன்ற விளையாட்டுக் காட்சிகளில் ஈடுபட்டிருந்த சோழமன்னன் கண்ணெதிரே ஒரு கோழிக்கும் யானைக்கும், யானைக்கும் யானைக்கும் போர் மூண்டது. "ஒழிந்தது கோழி" என்று எண்ணி எல்லோரும் விழித்த கண் இமையால் பார்த்து நின்றனர். சிறிது நேரத்தில் வேழம் தோற்றது; கோழி வென்றது. வீரக் கோழியை வேந்தனும் வியந்து புகழ்ந்தான். "கோழியூர் என்ற பெயர் உறையூருக்கு அமைவதாக" என்று அரசனும் ஆணை பிறப்பித்தான். சிலப்பதிகாரம் முதலிய செந்தமிழ் நூல்களில் கோழியூர் என்ற பெயர் உறையூருக்கு வழங்குகின்றது. சேரநாட்டில் கோழிக்கோடும் சோழநாட்டில் கோழியூரும் முன்னாளில் முடி மன்னர் வாழ்ந்த மணி நகரங்களாகும்.

3. தலச் சிறப்புகள்: இவ்வாலயத்தில் வீற்றிருந்து காட்சி தந்தருளும் இறைவனை உதங்க முனிவர் பூஜித்து முற்பிறப்பில் சிவத்திரவியங் கவர்ந்த மனைவியைக் கூடிய பாபம் போய் முக்தியடைந்தனர். காசிப மகரிஷியின் மனைவி கத்துரு பூஜித்துத் தன் சக்களத்தியை வஞ்சித்த பாபத்தினாலெய்திய வியாதி நீங்கி உய்ந்தாள். கத்துருவின்

மகன் கார்க்கோடகன் வந்து பூஜித்துத் தன் பேரன்னையை வஞ்சித்த பாபத்தினுலெய்திய குருடு நீங்கி உய்ந்தனன். என்னே இத்தல இறைவனின் பெருமை; கருடன் பூஜித்துத் தன்னைத் தரிசித்தோர் தன் ஒலி கேட்டோர் யாவரும் பயன்பெறும் வரம் பெற்ருன்.

ஆனிரை கவர்ந்து செல்லும் வேடன் தனக்கு இடையூருயிருந்த கிழநோய்ப் பசுவினை விட்ட காரணத்தால் நற்பேறடைந்தான்; வேத சுருதி என்னும் அந்தணன் பூஜித்துப் பேயுரு நீங்கி யுய்ந்தான்.

சூரவாதித்த சோழன் நாகராஜன் கன்னி காந்திமதியை மணந்து, நாகலோகததிலிருந்து கொண்டுவந்த ஐந்து சிவலிங்கங்களையும் வெவ்வேறு இடங்களில் வைத்து பிரதிஷ்டை செய்து பூஜிக்க எண்ணியபோது அவை யாவும் மூலலிங்கத்தில் கலந்து பஞ்சவர்ணேசுரராயினர். இவ்வாலயத்தில் உள்ள மூல சிவலிங்கப்பெருமானைச் சேர, சோழ, பாண்டியர் என்னும் மூவேந்தரும் ஒன்று சேர்ந்து வழிபட்ட திவ்ய தலமாகும.

4. புகழ்ச்சோழநாயனர்: அறுபத்து மூன்றுநாயன் மார்களில் ஒருவராகிய புகழ்ச்சோழ நாயனர் அவதரித்த தலம் இதுவேயாகும்.

5. திருப்பணி: ஆதியில் இவ்வாலயத்தை சூரவாதித்தன் என்னும் சோழ அரசனுற் புதிய முறையில் சீர்திருத்தஞ் செய்து சட்டப்பட்டதாகக் கூறப்படுகிறது. தற்காலத்திலும் இவ்வாலயத்தைப் புதிதாக திருப்பணி செய்யப்பெற்று மிகமிக அழகாகக் காணப்படுகிறது.

6. பாடல்கள்: இவ்வாலயத்தில் வீற்றிருந்து காக்ஷி தந்தருளும் கருணை வள்ளலாகிய சிவபெருமானை திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் "சேருமூக் கீச்சுரத்தடிகள் செய்கின்றதோர் செம்மையே" எனத் தேவாரத்தில் புகழ்ந்து பாடியுள்ளார். இங்கு பிரமனுக்கும் உதங்க முனிவருக்கும் ஐந்து வர்ணமாகச் சிவபெருமான் காட்சிகொடுத்தருளியதாகக் கூறப்படுகிறது. இது திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகளால் பாடல் பெற்றதுமாக விளங்குகிறது.

7. ஆலய அமைப்பும் திரு உருவும்: இவ்வாலயம் கிழக்குப் பார்த்த சந்நிதானம். சுவாமி சந்நிதானம் கிழக்குப் பார்த்ததும், தேவியார் சந்நிதானம் தெற்குப் பார்த்ததுமாக விளங்குகிறது. இவ்வாலயத்துள் தெற்குப் பிரகார திருமாளிகைப் பத்தியில் உதங்க மகரிஷியின் திருஉருவம் (சுமார் 2 - அடி உயரத்தில்) நின்ற திருக்கோலத்தோடு வடக்குப் பார்த்து அழகாக அமைந்துள்ளது.

இவ்வாலயத்திற்கு முன் உள்ள நந்தி சற்றுப் பெரிதாகவும் அழகாகவும் காணப்படுகிறது. இவ்வாலய வெளிப் பிரகாரத்தில் சந்நிதானத்திற்குத் தென்பால் சிவதீர்த்தம் சிறிதாகவும் அழகாகவும் காணப்படுகிறது.

8. ஆலய ஆட்சி: இவ்வாலயம் சென்னை அறநிலையப் பாதுகாப்புக் கழகத்தினரால் ஏற்படுத்தப்பட்டிருக்கும் தர்மகர்த்தர்களால் நன்கு பரிபாலிக்கப்பட்டுவருகிறது.

9. பூஜைகள்: இவ்வாலயத்திற்கு அநுதினமும் ஆறுகால பூஜைகள் நடைபெற்றுவருகின்றன.

10. நாமங்கள்: சுவாமி - பஞ்சவர்ணேசுரர்; தேவி - காந்திமதியம்மை; தீர்த்தம் - சிவதீர்த்தம்; தல விருக்ஷம் - வில்வம். இதற்குத் திருஞானசம்பந்தர் பாடிய பதிகம் 1.

(திருமூக்கீச்சுரம் - திருஞானசம்பந்தர் பாடியது— பண் - செவ்வழி - 2ந்திருமுறை)

சாந்தம் வெண்ணீறெனப் பூசிவெள் ளஞ்சடை வைத்தனர்
காந்தளா ரும்விர லேழையோ டாடிய காரணம்
ஆய்ந்துகொண் டாங்கறி யந்நிறைந் தாரவ ரார்கொலோ
வேந்தன்மூக் கீச்சரத் தடிகள்செய் கின்றதோர் மெய்ம்மையே.

மல்லையார் மும்முடி மன்னர்மூக் கீச்சரத் தடிகளைச்
செல்வரா கநினையும்படி சேர்த்திய செந்தமிழ்
நல்லராய் வாழ்பவர் காழியுள் ஞானசம்பந்தன்
சொல்லவல் லாரவர் வானுல காளவும் வல்லரே

——

# பிறர்க்கின்னுரை

அ. தா. ப. திருஞானசம்பந்தன்

உலகில் பொய்யென்று ஒன்று தோன்றியதால்தான் உண்மை என்பது எளிதில் உணரமுடிந்தது. சாதாரண கமலங்களைப் (கண்ணாடி கற்கள்) பார்க்கும்பொழுதுதான் வயிரத்தின் உயர்வு தெற்றெனத் தெரிகிறது. நயவஞ்சக பாதகனைக் காணும்பொழுதுதான், பழகும்பொழுதுதான், பண்புடைய பெருமக்களின் நேரிய தன்மை புலனாகின்றது. அதுபோல வன்சொற்கள் விரவி மக்களிடையே நிலவுவ தாலேயே இன்சொற்களின் உயர்வு பெரிதெனத் தெரிகிறது. இன்சொற்கள் மக்களை வாழ வைக்கின்றன. வன்சொற்கள் மக்களை வீழவைத்து மாய்க்கின்றன. இன் சொற்கள் நலனைப் பெருக்குகின்றன. வன்சொற்கள் தீமையை நிரப்புகின்றன. இன்சொற்கள் பேசி வாழ்வ தால் வாழ்நாளும் வளர்கின்றது. வன்சொற்கள் பேசி வாழ்வதால் வாழ்நாளும் தேய்பிறை யென்னத் தேய் கின்றது. வாழ்நாள் வளரத்தான் எல்லாரும் அவாவுவர். அங்ஙனம் அவாவுதலுக்கேற்ப இன்சொற்நள் பேசும் பழக்கம் கைக்கொள்ளின் நலம் பயக்கும். அது வளர் வதாக !

ஒன்றை நல்லதற்கும் பயன்படுத்தலாம். தீயதற்கும் பயன்படுத்தலாம். மனப்பான்மையும், சூழ்நிலையும் இருத்தற் கேற்ப, ஒன்று நன்மை அல்லது தீமையைப் பயக்கும். அட்டுன் விற்பவன் கையில் இருக்கும் கூரிய இரும்புக் கத்தியினை நோக்குங்கள் ! மருத்துவரிடம் வெப்புக் கட்டி யைச் சீர்செய்ய வைத்திருக்கும் மெல்லிய கூரிய அழகு பொருந்திய இரும்புக் கத்தியினை நோக்குங்கள் ! இரண்டு கத்திகளும் எதனால் செய்யப்பெற்றன ? இரும்பால் அன்றோ ! இரும்பேயாயினும் அவ்வப்பொருள்கள் செய்யப்பட்ட உருவிற்கும், பயன்படுத்துபவர் தன்மைக் கேற்பவும் அமைகின்றன அல்லவா ? இன்சொற்களையும் நலம் பயக்கும் முறையினும் பயன்படுத்தலாம் ; தீமை

பயக்கும் நிலையிலும் பயன்படுத்தலாம். இன்சொல் பேசி, சிவவேடப் பொலிவுடன் சென்று மெய்ப்பொருள் நாயனுரை மாய்த்தவன் ஒரு பாதகன் என்பதை இத்திருத் தொண்டர் புராணம் புகல்வதை அறிகிறேம். அதனின்றும் நாம் உணர்வது என்ன ? இன்செற்கள் பேசி உயிரையும் மாய்க்கலாம் என்பது அல்லவா ? அதனுல் நலம் பயக்கும் முறையில் இன்சொற்கள் வழங்குவதுதான்முறை. அதுவே நலனும் பயக்கும் என்பதை அறிக. இன்செற்கள் மெத் தெனவாக இருப்பன. வன்சொற்கள் வெட்டெனவாக இருப்பன. வன்சொற்கள் பேசி வாழ்வது பஞ்சுப் பொதியில் அம்பைப்பட்டுருவச் செய்வதை நிகர்க்கும். இன்சொற்கள் பேசி வாழ்வது, இருப்புப்பாறைக்கு நெக்கு விடாப்பாறை பசுமரத்தின் வேருக்கு நெக்கு விடுவதை ஒக்கும். அதனுல் இன்சொற்கள் எவ்வளவு வலிவுடையன என்பதைச் சிந்தியுங்கள்.

வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம் வேழத்தில்
பட்டுருவும் கோல்பஞ்சில் பாயாது—நெட்டிருப்புப்
பாறைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும்.

இன்சொற்கள் நலம் விளையும் முறையில் பயன் படுத்தினுல் சிறந்தது என்பதை உணர்ந்தோம்.

தழைத்த இனிய ஒரு பூங்கா அதனிடத்து நாம் செல்வ தாகக் கொள்வோம். பசியோ வருத்தி வாட்டும் நேரம். அப்பூங்காவில் தழைத்த இனிய பழமரங்கள் உள்ளன. அம்மரங்களில் பழங்கள் ஒருபாலும், காய்கள் ஒருபாலும் தொங்கிக்கொண் டிருக்கின்றன. அது நேரம் பழத்தை விரும்புவேமா ? காயை விரும்புவோமா ? பழத்தைத்தானே விரும்புவோம் ! பொதுவாக அறிவு வளராப் பெருத பச்சிளங் குழந்தையுங்கூட பழத்தைக் காட்டி வாங்கித் தாவேண்டும் என்று அழுகிறதே ! புசிக்க இனிக்கும் பழத்தையொத்துப் பேச இனிய சொற்கள் இருக்க, தின்னக் கசக்கும் காயை விரும்புவது ஏனே ? அறிவுடை யோர் விரும்பார்.

"இனிய வுளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று." (குறள். 100)

இன்சொற்கள் அறத்தை வளர்க்கும். வன்சொற்கள் பாபத்தை மிகச் செய்யும். இனிய சொற்களால் உலகத்தை ஆளலாம். வன்சொல்லோ உலகை மாய்க்கும். ஆக்கம் நன்று? அழிவு நன்று? ஆக்கந்தானே நன்று! அவ்வாக்கத்திற்குத் துணைசெய்வதன்றோ இன்சொல்?

"அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின்" (குறள். 96)

எவ்வளவுதான் ஒருவன் செல்வம் பெற்று வாழ்ந்தாலும், எவ்வளவுதான் கல்வி அறிவு ஒருவன் பெற்றிருந்தாலும், ஒருவனுக்கு பணிவு மெத்த அவசியம். விளைச்சலிலுள்ள நெற்பயிரை உற்று நோக்குங்கள். அது நம் பாரதத்தின் துரியோதனனைப் போல நிமிர்ந்தா நிற்கின்றது? அல்லவே! கற்றுணர்ந்தடங்கிய அறிஞர் பெருமக்களைப் போல, தலையைக் குப்புறக் கவிழ்ந்து சிந்திப்பதுபோலத் தோற்றுகிறது. அதனால் பணிவுதான் ஒருவனுக்கு அணிகலனாக விளங்குகின்றது. பொன்மலர் பெருமையுடையதே! இருப்பினும் அதற்கு நறுமணமும் சேர்ந்துவிட்டால் அதன் பெருமைக்கு அளவுண்டா? அதுபோலப் பணிவு ஒருவர் பெற்றிருப்பின் அது ஒரு நல்லணியே! அதனுடன் இன்சொல் என்பது இயைந்து நின்றால் அது மேலும் ஒரு பேரணிகலனாகி உடையவரை உயர்வடையச் செய்யும் என்பது திண்ணம்.

"பணிவுடையன் இன்சொல னாதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற" (குறள். 95)

முன்னர் இன்சொல் உலகையாளும் என்று கண்டோம். அது எப்படி? சொல்லும் ஆற்றல் வாய்த்தவர்க்கு, உலக மக்களைத் தங்கள்பால் ஈர்த்துக்கொள்ளும இயல்பு உண்டு. மக்களுக்கு உணர்ச்சிமிகுந்த சொற்களை ஊட்டி, தாங்கள் சொல்லும் சொல்லில் நம்பிக்கையை நாட்டி, உள்ளத்தைக்

கொள்ளைகொள்ளும் ஆற்றல் சிறந்த சொல்லாற்றல் பெற்ருர்க்கு உண்டு. சொல்லாற்றலை ஆக்க வழிக்கும் பயன்படுத்தலாம்; அழிவு வழிக்கும் பயன்படுத்தலாம். ஆக்க வழிக்குப் பயன்படுத்தும் சொல் இனிமை பொருந்தியதாகவே இருக்கும். இனிமையில் தோன்றும் சொல் இன்பத்தையே வளர்க்கும். நிறைந்த இன்சொற்களைக் கூறிப் பிணிக்கும் தகைமை பெற்றவர்கள் கூறும் சொற்படி உலகமக்கள் நடக்க அவாவுவர் என்பதே மாதாநுபங்கியின் கருத்து.

> "விரைந்து தொழில் கேட்கும் ஞாலம் நிரந்தினிது
> சொல்லுதல் வல்லார்ப் பெறின்." (குறள். 648)

உலக மக்கள் அனைவரும் இன்சொல் பேசப் பழக வேண்டும் என்பது தான் வள்ளுவரின் குறிக்கோள். இன்சொல் பேசும்பொழுது, இனிமையையே பயக்கின்றது. வன்சொல் பேசுங்கால், அச்சொல் சினத்தீயினின்றும் பிறக்கின்றது. கோபம் வருங்கால் உடற் சூடேறுவதோடு, அல்லாமல் நரம்புகள் தளர்ச்சி அடைகின்றன. அத்தகைய நிலையில் பிறக்கும் வன்சொல், குளிர்ச்சியாகக் கருணை பொருந்தியதாக இருக்குமா? இருக்காது! கந்தக அமிலத்தில் இட்ட செப்புத்துண்டு படும் பாட்டை என்னென்பது? வன்சொல் பேசும்போது உள்ளம் அத்தகைய பாட்டையே படுகின்றது. அதனுல் வன்சொல் எவ்வளவு தீமை உடையது என்பதை உன்னுங்கள். இன்சொல் வாழ்க! வன்சொல் வீழ்க!

> "இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
> வன்சொல் வழங்குவது." (குறள். 99)

இன்சொல் பயனிலாச் சொற்களைக் கொண்டதாக இருக்காது. பயனுடைய சொற்களைக் கொண்டதாக இருக்கும். பயனிலாச் சொற்கள் பேசும் பொழுது, வன்சொற்கள் வளர வழியுண்டாகும். என்ன பேசவேண்டும்? பேசினுல் என்ன விளையும்? என்பதை எண்ணிப் பேசவேண்டும். அது

தான் நலத்தை நல்கும். பறை அடிப்பதை ஒப்பப் பேசும் பேச்சுதான் வன்சொல் வளர்ப்பிற்குத் தாய். ஆய்ந்து, அறிந்து, உணர்ந்து பேசுங்காலத்து இன்சொல்லின் திறனும் மிகுகின்றது. அதனால் அதற்கு ஏற்ப நடத்தலே பெருமைதரும். பயனிலாச் சொற்களை அறிஞரானோர் பாராட்டமாட்டார். பயனிலாச் சொற்களை பேசுவோரை, அறிஞரானோர் பதடி என அழைப்பர்.

"பயனில்சொல் பாராட்டுவானை மகனெனல்
மக்கட் பதடி எனல்." (குறள். 196)

---

## முப்பத்தாறு தத்துவங்களின் பேர்*

(மாதவ இலக்கணச் சுவாமிகள் அருளிச்செய்தது)

நிலநீர் தீவளி வெளியே நாற்றம்
சுவையுரு ஊறொளி குறிகீழ் வழிகை
கால்வாய் மூக்கு நாக்கண் தோல்செவி
மனமாங் காரம் புத்தி குணமே
புருட னராகம் வித்தை கலையொடு
நியதி காலம் மாயை யென்று
சுவித்தை யீசம் சதாசிவம் சத்தி
சிவமிவை சைவசித் தாந்தத்தில்
தத்துவ மாறு றென்பசான் றோரே.

* இச்சூத்திரம், கோவை - உயர்சைவத்திரு. C. K. S. ஐயா அவர்கள் திருமாளிகையில் அடியேனும், சிறிதேறக்குறைய ஒன்றரை ஆண்டின் இறைவன் திருவடி நீழல் சேர்ந்த சித்த மருத்துவர் N. சுப்பிரமணியம், L. I. M. அவர்களும் தணிகைப் புராணத்தில் நந்தியுபதேசப் படலம் பாடங்கேட்டபோது அடிகளார் தாமே இபற்றி அடியேங்கட்கு அருளிச் செபதது. தாராபுரம் நா. ஆறுமுகம்பிள்ளை.

---